உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வணிகரில் ஐவர்





தேவகோட்டை

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள் எழுதியது

தேவகோட்டை

லெ. சுப. சுப.

பழநியப்பன் — அழகம்மை

திருமண நினைவு வெளியீடு

பரிதாபி - ஆனி - 15

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வணிகரில் ஐவர்



தேவகோட்டை

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள் எழுதியது

தேவகோட்டை

லெ. சுப. சுப.

பழநியப்பன் — அழகம்மை

திருமண நினைவு வெளியீடு

பரிதாபி – ஆனி – 15

சிவமயம்

ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கம் துணை



## பதிப்புரை

"மானுடப் பிறவி தானும்
வகுத்தது மனம்வாக் காயம்,
ஆனிடத் தைந்தும் ஆடும்
அரன்பணிக் காக அன்றோ"

என்பது சிவஞான சித்தியார். பெறுவதற்கரிய மனிதப்பிறவியைப் பெற்றிருக்கிற நாம், மனத்தாலும் மொழியாலும் உடம்பாலும் சிவப்பணிகளை இடையீடில்லாமல் செய்து இம்மை நலம், அம்மை நலங்களை எய்துதல் வேண்டும்.

சிவப்பணி, குரு லிங்க சங்கமங்களாகிய மூவகை வழிபாடுகளினாலேயே நிகழுவதென்பதைத் திருத்தொண்டர் புராணத்தால் அறிகின்றோம். திருத்தொண்டர் புராணத்தில் இடம் பெற்றுள்ள உண்மை நாயன்மார்களாகிய தனியடியார்கள் அறுபத்து மூவரில் நமது வணிகமரபில் அவதரித்த ஐவரது வரலாறு அருளித்தரப் பெற்றுள்ளது. அதனை ஒருங்கே

தொகுத்து வெளியிடுவது பயனுள்ள செயல் என்று எண்ணி இதனை என் புதல்வன் செல்வன் பழநியப்பனுக்கும் சண்முகநாதபுரம் திருவாளர் அ. எ. அரு. மு. மு. அரு. அருணாசலம் செட்டியாரவர்கள் புதல்வி செல்வி அழகம்மைக்கும் இன்று நிகழும் திருமண நினைவு வெளியீடாக இதனை வெளியிடுகின்றேன். சைவ உலகம் படித்துப் பயனடையத் திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று இதனை எழுதியுதவிய எங்கள் குருநாதர் *சிவஸ்ரீ* தத்புருஷ தேசிகரவர்களுக்கு எனது உளமார்ந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள
**லெ. சுப. சுப்பிரமணியன் செட்டியார்.**

தேவகோட்டை
28—6—72

உ

சிவமயம்

பாலறாவாயர் துணை

# வணிகரில் ஐவர்

'முறைமைவணி கரில்ஐவர் காரைக்கால் அம்மை
மூர்த்திகலிக் கம்பரமர் நீதிஇயற் பகையார்'
:— உமாபதி சிவாசாரியர்

## இயற்பகை நாயனார்

(சங்கம வழிபாடு)

திருச்சிற்றம்பலம்

"இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்"
:— திருத் தொண்டத் தொகை

செய்தவர் வேண்டிய தியாதும்
கொடுப்பச் சிவன்தவனாய்க்
கைதவம் பேசிநின் காதலி
யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை ஈந்தவன்
வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட்
டினத்துள் இயற்பகையே"
:— திருத்தொண்டர் திருவந்தாதி

சோழ வள நாட்டில் காவிரி கடலோடு கலக்கும் பெருமை பெற்று விளங்குவது "பூம்புகார்" என்னும் காவிரிப்பூம்பட்டினம். அந்தத் திருநகரத்தில், முதல் வணிகர் குலத்தில் "இயற்பகையார்" என்னும் பெயருடைய திருத்தொண்டர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவர் சிவனடியார்களுக்குத் தம்மிடம் உள்ள பொருள் எதுவேயாயினும், அதனை இல்லை என்னாது கொடுக்கும் இயல்புடையவராய்த் தமது மனைவியாருடன் ஒப்புயர்வற்ற இல்லறம் புரிந்திருந்தார்.

அந்நாளில் சிவபெருமான் தூய நீறு பூசிய திருமேனியில் தூர்த்த வேடமும் தோன்றும் ஒரு வேதியராகக் கோலம் கொண்டு, இயற்பகையார் சிவனடியார்களுக்கு இல்லை என்னாது கொடுக்கும் சிறப்பை உலகுக்குக்காட்டி உய்விக்க எண்ணி எழுந்தருளி வந்து அவரது திருமனையை அடைந்தார். அவர் இவரை எதிர்கொண்டு வரவேற்க: வேதியர் இயற்பகையாரை நோக்கிச் சிவனடியார்கள் குறித்து வேண்டிய பொருள் எதனையும் நீர் மறுது கொடுக்கும் உண்மையைக் கேட்டு உம்மிடம் ஒரு பொருளை வேண்டி வந்தோம். அதனைக்கொடுக்க இசையலா

மென்ருல் சொல்லலாம் என்ருர். இது கேட்ட இயற்பகையார் என்னிடமுள்ள எல்லாப் பொருள்களும் சிவனடியார்களது உடைமைகளே. இதற்கு ஒரு சிறிதும் ஐயமில்லை அருள் செய்தல் வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். வேதியர் உன் காதல் மனைவியை வேண்டி வந்தேன் என்ருர்.

இயற்பகையார் மிக மகிழ்ந்து''தேவரீர் என்னிடம் உள்ள பொருளையே கேட்டது எனக்குச் செய்த பெரும் பேறு என்று சொல்லி மனைவியாரிடம் விரைந்து சென்று, விதிமணக்குல மடந்தையே! இன்று உன்னை இந்த மெய்த்தவர்க்குக் கொடுத்தேன் என்ருர். மனைவியார் இதனைக் கேட்டுக்கலங்கிப் பின்னர்த் தெளிந்து எனது உயிர் நாதராகிய நீர் சொல்லிய ஒன்றைச் செய்வதன்றி வேறு உரிமை எனக்கு உண்டோ என்று கணவரை வணங்க அவரும் இவரை எதிர் வணங்க அம்மையார் வேதியரைப் பணிந்து அவர் பக்கத்திலே நின்ருர்.

நாயஞர் இனி அடியேன் செய்யத் தக்க பணி யாது? என்று வேதியரைக்கேட்க அவர் நான் இப்பெண்ணைத் தனியாகக் கொண்டு

போகும் போது சுற்றத்தாராலும் ஊரார்ராலும் ஊறு நேராதபடி நீ துணை வருக என்றார், முன்னதாகவே நினைந்து நானே செய்ய வேண்டிய இந்தப்பணியைத் தேவரீர் சொல்லும் வரை தாழ்த்தது பிழை' என்று கச்சணிந்து வாளும் 'பலகையும் தாங்கி வேதியரையும் அம்மையாரையும் முன்னே போக விட்டு இயற்பகையார் அவர்கள் பின்னே சென்றார்.

இதனையறிந்த சுற்றத்தாரும் ஊராரும் இயற்பகை பித்தனால் அதனைக் காரணமாகக் கொண்டு அவன் மனைவியை ஒருவன் கொண்டு போவதா? என்று வேல் வாள் முதலிய படைகளுடன் வேதியர் முன்னே வந்து "எமது குலக் கொடியாகிய பெண்ணை விட்டுப்போ" என்று சொல்லி எதிர்த்தனர். அவ்வேளையில் வேதியர் அஞ்சினவரைப்போல அம்மையாரைப் பார்க்க, அம்மையார் "இறைவனே! அஞ்ச வேண்டாம். இயற்பகை வெல்லும்' என்றார். இயற்பகையார் வேதியரை நோக்கி "அடியேன் இவர்களை யெல்லாம் வீழ்த்துகின்றேன். தளர வேண்டாம்" என்று சொல்லி எதிர்த்து நின்றவர்களிடம் "நீங்கள் ஒருவரும் எதிரில் நில்லாமல் ஓடிப்பிழையுங்கள் இல்லையாயின் எனது

வாளினால் கூறுக்கப்பட்டுத் துடிக்கின்றீர்" என்று எச்சரிக்கை செய்தார் அவர்கள் "ஏடா! நீ என்ன செய்தாய்? நாட்டவர் பழிக்கும் பகைவர் நகைக்கும் நாணுகின்றாயில்லை. நாங்களும் கூடவே மாண்டு போவதன்றி நீ அவளை வேதியர்க்குக் கொடுக்க நாங்கள் இசையோம்" என்று எதிர்த்தார்கள்.

இயற்பகையார் கடுங்கோபம் கொண்டு அவர்கள் மேற் செல்ல, அவர்கள் இவர்மேற் செல்லாது அம்மையாரைக் கொண்டு செல்லும் வேதியர் மேற்சென்று எதிர்த்துத் தடுத்தார்கள். இயற்பகையார் அவர்கள் மேற் பாய்ந்து உயிருக்குத் தப்பி ஓடிப் பிழைத்தவர்கள் போக எதிர்த்தவர் அனைவரையும் துண்டித்து வீழ்த்தினார்.

பின்னர் வேதியரையும் அம்மையாரையும் முன்னேவிட்டுப் பின்னே சென்ற இயற்பகையாரிடம் "திருச்சாய்க் காடு" என்னும் திருத்தலத்தை அடைந்தவுடன் வேதியர் "இனி நீ மீள்க" என்றார். அவர் இவரது திருவடிகளைப் பணிந்து மகிழ்ந்து மீண்டார்.

இவ்வாறு சென்ற திருத்தொண்டரை நோக்கிப் பொய்மையில்லாத மனத்துடன் திரும்பியும் பாராது சென்ற திறத்துக்கு மகிழ்ந்து,

"இயற்பகை முனிவா ஓலம் ஈண்டு நீ வருவாய் ஓலம்
அயர்ப்பிலா தானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம்
செயற்கரும் செய்கை செய்த தீரனே ஓலம் என்றான்
மயக்கறும் மறையோல் இட்டு மாலயன் தேட நின்றான்.

இயற்பகையார் இதுகேட்டு "அடியேன் இதோ வந்தேன் வந்தேன் பிழைத்தவர்கள் இன்னும் உண்டானால் என் வாளினால் வெட்டுண்கிறார்கள்"என்று சொல்லி விரைந்துஓடி வந்தார்.

வந்தவர் வேதியரைக் காணவில்லை அம்மையாரை மட்டும் கண்டார். வானிலே வெள் விடையின் மேல் உமையம்மையாருடன் சிவபெருமான் காட்சிதரத் தெரிசித்தார். கீழே விழுந்தார் எழுந்தார். பல முறையும் போற்றித் துதித்தார். சிவபெருமான் செய்த பேரருளைப் போற்றி நின்றார்.

சிவபெருமான் தொண்டரை நோக்கி, "உலகிலே நீ நம்மிடத்துப் பண்ணிய பரிவு கண்டு மகிழ்ந்தோம். நண்ணிய மனைவியோடு நம்முடன் போதுக", என்று அருளிச் செய்து பேறுதந்து பொன்னம்பலத்தில் எழுந்தருளினர். நாயனரும் மனைவியாரும் மார்கழி உத்தர நாளில் சிவலோகத்திலே கும்பிட்டு உடனுறையும் பெருமை பெற்ருர்கள். மற்றைச் சுற்றத் தாரனைவரும் சுவர்க்க வாழ்வு பெற்றனர்.

திருச்சிற்றம்பலம்.

## அமர் நீதி நாயனர்
### (சங்கம வழிபாடு).

திருச்சிற்றம்பலம்

**அல்லிமென் முல்லையந்தார் அமர் நீதிக் கடியேன்.**

:- திருத்தொண்டத்தொகை

மீண்டும் பொழிற்பழை யாறை
அமர்நீதி வெண்பொடியின்
முண்டம் தரித்த பிரமற்கு நல்
லூரின்முன் கோவணம்நேர்
கொண்டிங் கருளென்று தன்பெரும்
செல்வமும் தன்னையுந்தன்
துண்ட மதிநுதலாளையும்
ஈந்த தொழிலினனே.

:- திருத்தொண்டர் திருவந்தாதி

சோழநாட்டில் சிறந்துள்ள பழம்பதிகளுள் ஒன்று, பழையாறை. இத்திருப்பதியில் வணிகர் குலத்தில் வந்து உதித்தவர் அமர்நீதியார். இவர் பொன், மணி, துகில் முதலியவற்றிலே வாணிகம் செய்து வளமிகுந்து வாழ்ந்தார். சிவபெருமான் திருவடியையன்றி வேறொன்றையும் சிந்தை செய்யாத இயல்புடைய இவர் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்து அவர்களுக்குக் கந்தை, கீள், கோவணம், உடை ஆகியவற்றை உதவி வந்தார். திருநல்லூருக்குச் சென்று அங்குத் திருவிழா அணி சேவித்துச் சிவனடியார்கள் அமுது செய்யும் திருமடம் அமைத்துப் பழையாறையை விடுத்துச் சுற்றத்தார்களுடன் திருநல்லூரில் குடிபுகுந்து, திருத்தொண்டு செய்து கொண்டிருந்தார்.

ஒரு நாள் சிவபெருமான் தமது கோவணப் பெருமையைக் காட்டி நாயனுருக்கு அருள் புரியும் பொருட்டு, மறையவர் குலத்துப் பிரமசாரியின் வடிவம் தாங்கித் திருமுடியிலே பஞ்ச சிகையும் நெற்றியிலே வெண் திருநீறும் மெய்யிலே மான் தோலுடன் கூடிய பூணூலும் கையிலே பச்சைத் தருப்பையால் அமைந்த பவித்திரமும் இடையிலே முஞ்சிப்புல்லினுல் திரித்த அரைஞாணில் கட்டிய மறைக் கோவண ஆடையும் விளங்க, மெய்யடியார்களது நெஞ்சில் நீங்காத திருவடிகள் நிலந்தோயும்படி நடந்து வந்து, அமர்நீதியாரது அன்பு நெறியை உலகத்தாரறிய வெளிப் படுத்துவதற்காக ஏந்திய தண்டில் இரண்டு கோவணங்களையும் திருநீற்றுப் பையையும் தருப்பையையும் முடிந்து கொண்டு அமர்நீதியாரது திருமடத்தை அடைந்தார்.

அமர்நீதியார் பிரமசாரியாரை முகமலர்ந்து வரவேற்க, அவர் "அடியார்களுக்கு நீர் அன்புடன் அமுதூட்டிக் கந்தை. கீள், உடை அழகிய வெண்கோவணங்கள் கொடுப்பது கேட்டு உம்மைக் காண வந்தனம்" என்ருர் அமர்நீதியார் பிரமசாரியாரைப் பணிந்து திருமடத்தில் அமுதுகொண்டருள வேண்டும்

என்று வேண்ட அவர் அதற்கிசைந்து நான் காவிரி நீராடி வருவேன். மழை வந்தால் உதவும் பொருட்டு இந்தக் காய்ந்த கோவணத்தை உம்மிடத்து வைத்திருந்து தருவீராக. இதன் பெருமையை உள்ளபடி உமக்கு நான் சொல்ல வேண்டியதில்லை " என்று தமது கைத்தண்டின் மீதிருந்த கோவணங்களிலொன்றை அவிழ்த்து அவர் கையிற் கொடுத்தார். அமர்நீதியார் அதனை வாங்கிக் கொண்டு விரைவிற் குளித்துத் தேவரீர் இங்கெழுந்தருள வேண்டுமென்று வேண்ட, அவர் காவிரியாடுதற் கென்று சென்றார். அமர்நீதியார் கோவணத்தைப் பாதுகாப்பான இடத்தில் தனியே சேமஞ்செய்து வைத்து விட்டுப் பிரமசாரியாரின் வரவை எதிர் நோக்கிக் கொண்டிருந்தார்.

சென்ற பிரமசாரியார், அமர்நீதியார் வைத்த இடத்திலிருந்து. கோவணத்தைப் போக்கி விட்டுத் தலையிலுள்ள கங்கை நீரில் குளித்தாரோ அல்லது காவிரி நீரில் குளித்தாரோ என்னும்படி மழைபொழிய அதில் நனைந்து கொண்டு திருமடத்தை அடைந்து, தண்டிலுள்ள மற்றொரு கோவணமும் ஈரம் ஆயிற்று, ஆதலின் நான் தந்த கோவணத்தைக்

கொண்டு வாரும்" என்று நாயனரிடம் கேட்டார் ஐயர் செய்த மாறுபாட்டை அறியாத அன்பர், தாம் வைத்த இடத்தில் கோவணத்தைக் காணுது திகைத்தார். மற்ற இடங்களில் தேடியும் காணுதவராய் மனைவியார் சுற்றத்தாருடன் வருந்தித் துயரங் கொண்டார். மற்றொன்றும் நினைக்க மாட்டாதவராய்த் தம்மிடமுள்ள கோவணங்களில் ஒன்றை எடுத்துக் கொண்டு பிரமசாரியார் முன்னே சென்று "தேவரீர் தந்த கோவணத்தை வைத்த இடத்தில், அது காணப் பெறவில்லை. வேறிடத்தில் அதனை ஒளித்தவரும் இல்லை. அது எவ்வாறு மறைந்ததென்பது எனக்குப் புலப்படாத அதிசயமாயிருக்கிறது. வேறு நல்லதொரு கோவணம் கொண்டு வந்திருக்கிறேன். இது கிழித்த கோவணம் அன்று. நெய்தமைத்த கோவணம். என் பிழையைப் பொறுத்து ஈரத்தை மாற்ற இதனைச் சாத்தித் திருவமுது செய்ய எழுந்தருள வேண்டும்" என்று வேண்டினர்.

பிரமசாரியார் "அமர்நீதியாரே! உமது நிலைமை மிக நன்று. இடையில் நாள் கழிந்ததும் இல்லை. இன்று நான் உம்மிடம் வைத்த கோவணத்தைக் கொண்டு அதற்கெதிராக

வேறொன்றைக் கொள்க'' என்று நீர் கூறுவது முறையாகுமா? சிவனடியார்களுக்குக் கோவணம் கொடுப்பேனென்று நீர் சொல்லித்தது, என் கோவணத்தைக் கொள்வ-தற்காகவா? என்று கடுங்கோபம் கொண்டவர் போலக் கேட்டார். அமர்நீதியார் முகம் புலர்ந்து ''இந்நிகழ்ச்சி அடியேன் அறிய வந்ததன்று. சிறியேனது பெரிய பிழையைப் பொறுத்தருளி நல்ல பட்டாடைகள், மணிகள் முதலியவற்றைப் பெற்றுக் கொண்டு அருள் புரியவேண்டுமென்று விண்ணப்பித்தார்,

வேதியர் கோபம் தணிந்தவர் போலக் காட்டி ''எனக்கு உங்கள் மணியும் பொன்னும் வேண்டுவதின்று. எனது கோவணத்திற்கு நேரான கோவணந் தருதலே அமையும் என்றார். அமர்நீதியார் அதற்கு மகிழ்ந்து இசையத் தண்டின் மேல் இருந்த கோவணத்தை அவிழ்த்தெடுத்து அதற்குச் சமமாகிய எடையுள்ள கோவணந் தாருமென்று பிரமசாரியார் கூறினார். அமர்நீதியார் ஒரு துலையை நாட்டி ஒரு தட்டில் மறையவர் தந்த கோவணத்தை இட்டு மற்றைத் தட்டில் தம் கையிலிருந்த கோவணத்தை இட்டார். துலை நேர் நில்லாது போகவே, அடியார்களுக்கு அளிக்கத் தாம் வைத்திருந்த அத்தனை கோவணங்களையும் பட்டுக்களையும் துகில்களையும்

மேலும் மேலும் இட்டார். அப்போதும் மறையவர் கோவணத்தட்டுத் தாழ்ந்தே நின்றது.

அமர்நீதியார், வேதியர் இசைவுபெற்றுப் பொன், வெள்ளி, மணிகள் முதலிய பலவகைப் பொருள்களையும் இட்டும் தட்டுக்கள் சமன் பெற வில்லை. கண்ட அமர்நீதியார் தம்மதாக எண்ணிய எல்லாவற்றையும் இட்டொழிந்த பின்னர்த் தாமும், மனைவியாரும், மைந்தனும் துலையில் ஏறப்பெற வேண்டுமென்று வேதியரை இறைஞ்ச அவரும் அதற்கு இசைந்தார். அவ் வாறே மூவரும் துலையை வலம் வந்து, "சிவ பெருமானது திருநீற்று மெய்யடிமைத் திறத்தில் நாங்கள் பிழைத்திலோம் என்பது உண்மை யாயின் இத்துலை நேர் நிற்க" என்று கூறி நல்லூர்ப் பெருமானை வணங்கித் திருவைந்தெழுத்தை ஓதிக் கொண்டு தட்டின்மேல் ஏறினார்கள்.

பெருமானது கோவணமும் அமர்நீதியாரது அன்பு குறைபடாத அடிமைத் தொண்டும் ஒப்பாவனவாதலின் துலை நேர் நின்றது. மறையவராக வந்த இறையவர் மறைந்து ஆகாயத்தில் உமாதேவியாருடன் காட்சி கொடுத்தருளி நாயனாரையும் மனைவியாரையும்

மைந்தரையும் சிவபுரியில் இன்பமார்ந்திருக்க வைத்தார். இது ஆனிமாதத்துப் பூர நன்னாளிலாகும்.

திருச்சிற்றம்பலம்

## மூர்த்தி நாயனார்

(இலிங்க வழிபாடு)

திருச்சிற்றம்பலம்

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும்
"அடியேன்"

:- திருத்தொண்டத் தொகை

அவந்திரி குண்டமண் ஆள்வதில்
மாள்வனென் றன்றுலவாய்ச்
சிவன்திரு மேனிக்குச் செஞ்சந்
தனமாச் செழுமுழங்கை
உவந்தொளிர் பாறையில் தேய்த்துல
காண்டவொண் மூர்த்திதன்றூர்
நிவந்தபொன் மாடமதுரா
புரியென்னும் நீள்பதியே

திருத்தொண்டர் திருவந்தாதி

மேன்மை மிக்க சான்றோர்களால் போற்றப் பெறுவது, பாண்டி நன்னாடு. இந்தத் திரு நாட்டிற் பாய்ந்து வளம் பெருக்கிக் கடலில் புகுவது, தாமிரபர்ணியாறு, இது பாய்வதால் இங்குள்ள கடலில் முத்துக்கள் விளைகின்றன. இந்நாட்டிலுள்ள சந்தனச்சோலை சூழ்ந்த பொதியமலை தமிழ் நாட்டுக்குத் தென்றலை ஈந்து குளிர்ச்சியை வழங்கும் இங்கு வழங்குகின்ற உலகளந்த தெய்வத்தமிழ், அன்பு தந்து தளிர்க்கும் அமைதியை உடையது,

கல்வி நலமும் செல்வ வளமும் மிகுந்த கன்னி நாட்டின் தலைநகரம் மதுராபுரி. இங்கு, செய்யுள் மிக்கேறும் முத்தமிழ்ச் சங்கங்கள் நிலவின. இத்திரு நகரத்தில், தமிழ்நூலின்கண் விளங்கும் செம்பொருள்களைத் தருபவராகிய ஆலவாயடிகள் சங்கமிருந்து தமிழாராய்ந் தாரென்றால் எல்லாவுலகங்களிலும் இது பெரும் புகழ் பூண்டதல்லவா?

இந்தத் திருநகரத்தில் வணிக குலத்தில் சிறப்பு மிக்க பழங்குடியில் அந்தக் குடி செய்த தவத்தின் பயனாக மூர்த்தியார் என்பவர் அவதரித்தார். அவர் சிவபெருமானது ருதி

வடிகளையே மெய்ப்பற்ருகப் பற்றியவர் அத் திருவடிகளையே தமக்குத் துணையாகக்கொண்டு அடையும் பொருளும் அதுவே என ஒழுகி வந்தார். திருவாலவாயில் எழுந்தருளியுள்ள சொக்கலிங்கப் பெருமான் திருமேனிக்கு நாடோறும் மெய்ப்பூச்சுக்குச் சந்தனக்காப்பு அறைத்துக் கொடுக்கும் திருப்பணியை அவர் வழுவாமல் செய்து வந்தார்.

அந்த நாளில் வடுகக் கருநாட மன்னனொருவன் மண் கவரும் ஆசையினுலே பெரும்படையுடன் வந்து பாண்டிய மன்னனுடன் போர் செய்து வென்று அரசாட்சியைக் கவர்ந்து மதுராபுரிக் காவலை மேற்கொண்டான், அவன் தீய நெறி யாகிய சமணர் திறத்தில் சார்ந்து சிவனடியார் களை அவர்களது அடிமைத்திறத்தில் செல்ல வொட்டாது வலிமை செய்து மூர்த்தியாரது திருத்தொண்டுக்கும் பல இடையூறுகளை விளை வித்தான். அவர் அவற்ருல் ஏதும் தடை படாது தமது திருப்பணியை நியதியாகச் செய்து கொண்டு வந்தார். தமது பெருமைக்கு அளவாகிய சார்பிலே நின்று ஒழுகுகின்ற நம்து பெருமக்களை யாவர் தடுக்க வல்லார்? சமண

மன்னன் மூர்த்தியார் சந்தனக் கட்டை தேடிக் கொள்ளும் துறைகளை அடைத்தான். அதற்குச் சிந்தை நொந்த மூர்த்தியார் இந்தப் பாதகன் மாய்ந்திடத் திருநீற்று நன்னெறியைத் தாங்கும் மன்னனை இந்நாடு பெறுவது என்றோ? என்று எண்ணினார்.

அன்று பகல் முழுவதும் சந்தனக்கட்டை தேடிப், பெறமுடியாமல் வருந்திச் சொக்கலிங்கப் பெருமான் திருக்கோயிலை அடைந்து "இன்று இறை வரது மெய்ப்பூச்சுக்குச் சந்தனம் முட்டுப் பட்டாலும் அதனைத் தேய்க்கும் இந்தக் கையினுக்கு முட்டில்லை" என்று துணிந்து சந்தனப்பாறையில் தமது முழங்கையைத் தேய்த்தார், குருதி பெருகிற்று. தோலும் தசையும் நரம்பும் எலும்பும் தேய்ந்தன. எலும்பிடை வழுது சொரிந்தது. "ஐயனே! அன்பின் துணிவினால் இதனைச் செய்யாதே. உன்னை அலைத்தவனது நாடு முழுவதையும் நீயே ஆண்டு துன்பம் போக்கி உலகத்தைக் காத்து உனது திருப்பணியை மகிழ்ச்சியோடு செய்து நமது உலகத்தை அடைவாயாக" என்று அசரீரி வாக்கு எழுந்தது கையில் உண்டாகிய ஊறு

நீங்கி அழகிய திருமேனியுடன் மூர்த்தியார் விளங்கினார்.

அன்று இரவிலேயே சிவனடியார்களுக்குத் துன்பம் செய்த அந்தக் கொடிய மன்னன் இறந்து போய் எரிவாய் நரகில் வீழ்ந்தான். அவனுக்கு மக்கள் இல்லாமையால் ஞாலம் காவலுக்கு நல்ல மன்னன் ஒருவனைப் பெற அமைச்சர்கள் யானையைக் கண் கட்டி விட்டு அதனால் ஏந்தி வரப் பெறுபவரை அரசராகக் கொள்ளத் துணிந்து அவ்வாறே செய்தனர்.

யானை திருவாலவாய்த் திருக்கோயிலை அடைந்து மூர்த்தியாரைத் தாழ்ந்து எடுத்துப் பிடரியின் மேல் தரித்துக் கொண்டது. "சமண் நீங்கிச் சைவம் ஓங்குமாகில் நான் அரசை ஏற்றுப் புவியை ஆள்வேன். முடி சூட்டும் சடங்குக்குத் திருநீறே அபிடேகமாகவும் உருத்திராக்க மணியே அணிகலனாகவும் சடை முடியே முடியாகவும் இருக்கக் கடவன" என்று மூர்த்தியார் அருளிச் செய்து மங்கள ஓசையும் மறைமுழக்கமும் வாழ்த்தொலியும் நிறைய நாட்டின் அரசராக முடிசூடிக் கொண்டார்.

அரண்மனையினின்றும் திருவாலவாய்த் திருக்கோயிலுக்குச் சென்று அம்மையப்பரை வணங்கி யானை மீதேறித் திருவீதியுலா வந்து அரச மண்டபத்தில் சிங்காதனத்தில் கொலு வீற்றிருந்து மூர்த்தியார் நல்லாட்சி புரிந்தார். அவரது குறிப்பின் வழியே அமைச்சர்கள் ஒழுகினார்கள். சமண் பகை நீங்கித் திருநீற்று நெறி நீடு வாழ, சிவாகமங்களின் பதம் விளங்கப் பவங்கள் மாற உதவுகின்ற திரு நீறு, கண்டிகை, சடைமுடி என்ற மும்மையினால் உலகாண்டார் மூர்த்தியார்.

குறையில்லாத முழுத்துறவை மேற்கொண்ட மூர்த்தியார், அகப்புறப் பகைகளை ஒழித்து, நெடுங்காலம் நிலவுலகத்தை ஆண்டு, எல்லா உயிர்களுக்கும் துன்பம் நீங்கிய இன்ப வாழ்வை வழங்கிக் காத்துத் தாம் மேற்கொண்ட திருத் தொண்டையும் இடைவிடாது செய்து வாழ்ந்து, ஒரு ஆடிமாதக் கார்த்திகை நாளில் சிவபெரு-மானது திருவடி நீழலை அடைந்தனர்.

திருச்சிற்றம்பலம்

# காரைக்கால் அம்மையார்
(சங்கம வழிபாடு)

"பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும்
அடியேன்"
:- திருத்தொண்டத் தொகை

நம்பன் திருமலை நான்மிதி
யேனென்று தாளிரண்டும்
உம்பர் மிசைத்தலை யால்நடந்
தேற உமைநகலும்
செம்பொன் உருவனென் அம்மை
எனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பின் உகுகாரைக் காலினில்
மேய குலதனமே

:— திருத்தொண்டர் திருவந்தாதி

காரைக்கால் என்பது, சோழ நாட்டில் உள்ள கடல் துறைமுகப்பட்டினம். அங்கு உள்ள வணிகர் குலத் தலைவர் தனதத்தனார் என்பவர். அவர் செய்த தவத்தின் பயனாக அவரிடம் திருமடந்தை அவதரித்தாளென்று

சொல்லும் படியாகப் புனிதவதியம்மையார் வந்து அவதரித்தார். தளர்நடைப் பருவத்திலேயே சிவபெருமானது அடிமைப் பாங்கு பெற்றவராய்க் குதலை மொழிப் பயிற்சி யனைத்தும் சிவபெருமானது திருவார்த்தைப் பயிற்சியாக நிகழ அழகின் கொழுந்து வளர்வது போல அவர் வளர்ந்து வந்தார்.

அம்மையாருக்கு மணப்பருவம் வந்தது. தங்கள் மரபுக்கேற்ற பழங்குடியில் வந்த நாகப்பட்டினத்து நிதிபதி என்பவருடைய மைந்தனார் பரமதத்தனாருக்குப் புனிதவதியாரை மணம் பேசித் தனதத்தனார் கலியாணம் செய்து கொடுத்தார், தமது குடிக்கு ஒரே புதல்வியாத லால் புனிதவதியாருக்குக் காரைக்காலிலேயே அழகிய மாளிகை ஒன்றை அமைத்துக் கொடுத்துத் தனதத்தனார் அளவற்ற செல்வத் தையும் வழங்கி, வாழ்ந்திருக்கும்படி வைத்தார்.

பரமதத்தனார் புனிதவதியாருடன் பெருங் காதல் சிறக்க வாழ்ந்து, வாணிகத்துறையில் மேம்பட ஒழுகி வந்தார். புனிதவதியார் சிவபெருமானிடத்திலும் சிவனடியாரிடத்திலும் மெய்யன்பு பூண்டவராய்ச் சிவனடியார்களுக்குத்

திருவமுதூட்டுதல், செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் கொடுத்தல் ஆகிய திருப்பணிகளைச் செய்து வந்தார்.

அந்நாளில் ஒரு நாள் பரமதத்தனிடம் தொழில் நிமித்தமாக வந்த சிலர் அவனுக்கு ஓரிரண்டு மாங்கனிகளைக் கொடுத்தனர். அவன் அவற்றை வீட்டில் கொடுக்கும்படி அனுப்பினன். இந்த வேளையில் சிவனடியார் ஒருவர் மிகுந்த பசியுடையவராகிப் புனிதவதியார் இல்லத்தை நாடி வந்தார். அவரது நிலையைக் கண்ட புனிதவதியார் அவருக்குத் திருவமுதூட்ட எண்ணி, அப்போது கறியமுது உதவாது திருவமுது மட்டும் கைகூடியிருந்ததால் பரிகலத்தில் திருவமுதுடன் கணவன் அனுப்பிய மாங்கனிகள் இரண்டிலொன்றைக் கொண்டு வந்து மகிழ்வோடு படைத்துச் சிவனடியார் மகிழ அமுதருத்தி அனுப்பினர்.

நண்பகலில் பரமதத்தனர் வீட்டிற்கு வந்து உண்ணப்புக, அம்மையார் ஊட்டுவாராகி அடிசிலும் கறிகளும் படைத்து; எஞ்சியிருந்த ஒரு மாங்கனியைப் பரிகலத்திலே இட்டார். மனைவியார் படைத்த மதுரம் மிக்க மாங்கனியை

உண்ட பரமதத்தன், அதன் சுவையில் ஈடுபட்டு, "இது போன்ற கனி இன்னும் ஒன்றிருப்பதையும் இடுக" என்று கேட்டான். அம்மையார் அதனைக் கொண்டு வரச்செல்லுபவர் போல வேறிடத்தை அடைந்து செயல் காணாது மெய்மறந்து உற்ற இடத்தில் உதவும் சிவபெருமான் திருவடிகளை மனம் பொருந்த உணர்ந்தனர். உடனே அவரது கையில் அதிமதுரக் கனியொன்று வந்திருந்தது. அதனைக் கொண்டு வந்து மகிழ்ச்சியோடு கலத்திலே இட்டார். பரமதத்தன் அக்கனியை உண்டு அதன் சுவை, அமுதினும் மேம்பட்டதாயிருப்பதைக் கண்டு "இது முன்னே தந்த மாங்கனியன்று மூவுலகிலும் பெறுதற்கரியது. இதனைப் பெற்றது வேறு எங்கு" என்று அம்மையாரைக் கேட்க அவர் இறைவர் தமக்குச் செய்த பேரருளின் திறத்தைப் பிறரறியச் சொல்வது முறையன்று என்று நினைந்து அதனைச் சொல்ல மாட்டாமலும் கற்பு நெறியினால் கணவன் கேட்டதற்கு உண்மையுரையாதிருப்பது நேர்மையன்று என நினைந்து நிகழ்ந்ததை மறைக்க மாட்டாமலும் கலங்கி நடுங்கி எவ்வாறாயினும் உண்மையைச் சொல்லுவதே முறை என்று துணிந்து சிவபெருமானை வணங்கிக் கனி புகுந்த விதத்தைக் கணவனாரிடம் உரைத்தார்.

பரமதத்தனுர் அதன் உண்மையைத் தெளியாதவராய்ச் "சிவபெருமான் திருவருளாயின் இன்னுமொரு கனியை அழைத்து அளிப்பாய்" என்ருர். அம்மையார் இறைவனைப் பரவி "ஈங்கு இதனை அருள் செய்யாவிடில் என் உரை பொய் ஆகிவிடும்" என்று வேண்டத் திருவருளால் மற்ருெரு மாங்கனி வந்து எய்திற்று. அதனைக் கணவனுர்கையிற் கொடுத்தார். அதிசயத்துடன் அதனை வாங்கிய பரமதத்தனுர் கையிலிருந்து அது மறைந்து விட்டது.

பரமதத்தனுர் பயந்து மனம் தடுமாறி அம்மையாரை ஒரு தெய்வமென்று கருதி, அவரை விட்டு விலகியிருத்தல் வேண்டுமென்று துணிந்து அதனை எவருக்கும் சொல்லாது அம்மையாருடன் தொடர்பின்றி ஒழுகி வந்தார். அம்மையாரைப் பிரிவதே எண்ணமாகக் கொண்டிருந்த தனதத்தனுர்" கப்பலிற் சென்று வாணிகம்செய்து வருவேன்" என்று சொல்லி மரக்கலம் சமைத்து நல்ல நாளில் கடற் கடவுளைப் போற்றிப் பயணம் கொண்டு அயல் தேயத்திற்குச் சென்று பெரும் பொருளீட்டி மீண்டு பாண்டி நாட்டிலோர் பட்டினத்தை அடைந்து அவ்வூரிலொரு வணிகன் மகளை மணஞ்செய்து

கொண்டு வாழ்ந்துவந்தார். அவளிடமாக அங்கே அவருக்கு ஒரு பெண்மகவு பிறந்தது. தனது முன்னை மனைவியாரைத் தான் வணங்கும் தெய்வமாகவே கொண்டிருந்த பரமதத்தனுர் அவர் பெயரையே தமது மகவுக்குப் பெயராக இட்டனர். இது இங்ஙனமாக:

காரைக்காலில் புனிதவதியார் கற்பு நெறியுடன் மனையில் தங்கி அறம்புரிந்து வந்தார். அந்த நாளில் பரமதத்தன் பாண்டி நாட்டுப் பட்டினத்தில் பெரும் செல்வத்துடன் வாழ்வதை அம்மையாரின் உறவினர் கேள்வியுற்று அம்மையாரை அவரிடம்கொண்டுபோய்விடுவதே முறையென்று துணிந்து அவரைச் சிவிகையில் ஏற்றித் திரையால் மூடித் தோழியருடன் அந்தப் பட்டினத்தை அடைந்து அம்மையார் வந்திருப்பதை அவருக்கு அறிவித்தனர்.

பரமதத்தனுர் பேரச்சம் கொண்டு பின்னர் மணந்த மனைவியையும் பெற்ற மகவையும் உடன் கொண்டு வந்து மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார் அடியில் தாழ்ந்து "யான் உமது அருளால் வாழ்வேன். இவ்விளங் குழவிக்கு உமது நாமம் இட்டுள்ளேன்" என்று பணிந்தார்.

கணவனுர் தன்னை வணங்கக் கண்ட அம்மையார் அச்சத்துடன் சுற்றத்தார் புால் ஒதுங்கி நிற்க, அவர்கள் அவரை நோக்கி, "நீ உன் மனைவியை வணங்குவதென்னை" எனக் கேட்டனர். பரம தத்தனுர் "இவர் மானிடம் அல்லர், நற்பெரும் தெய்வமே ஆவர்". அதனை நான் அறிந்து நீங்கிய பின் பெற்ற இந்த மகவுக்கு இவர் பெயரையே இட்டேன். அதனுல் இவரை அடி வணங்கினேன். நீங்களும் வணங்குங்கள்" என்ருர்.

வணிகர் கூறிய மாற்றம் கேட்ட அம்மையார், சிவபெருமான் திருவடிகளில் ஒன்றிய உணர்வு கொண்டு "இங்கு இவன் குறித்த கொள்கை இது. இனி இவன் பொருட்டாக இதுவரை தாங்கியிருந்த அழகு மிக்க தசைச் சுமையை இங்கே கழித்து உம்மிடம் அங்குள்ள பேய்க் கணங்கள் போற்றுகின்ற பேய்வடிவத்தை அடியேனுக்கு அருளுதல் வேண்டுமென்று வேண்டினுர். சிவபெருமானுடைய திருவருளி னுலே கிடைத்த பேய்வடிவத்தில் இருந்து கொண்டு ஒருமையுணர்வு கைவரப்பெற்று" அற்புதத்திருவந்தாதி" பாடியருளித்திருவிரட்டை

மணிமாலையையும் அருளிச் செய்து திருக் கயிலையை வழிபட வடதிசை நோக்கிச் செல்வா ராயினர்.

இடைப்பட்ட இடங்களை மனத்தினும் கடிதாகக் கடந்து சென்று திருக்கயிலாய மலையை அடைந்து காலினால் செல்லுதலைத் தவிர்த்துத் தலையினால் நடந்து மலைமீதேறி மகிழ்வுடன் சென்றார். அப்போது இமயவல்லியாரது திருக்கண் நோக்கு இவர் மேல் பதிந்தது. உமாதேவியார் வியப்படைந்து சிவபெருமானை நோக்கி, "தலையினால் நடந்து வருகின்ற இந்த எற்புடம்பின் அன்பு என்னே" என்று வினவ அவர் "வருகின்ற இவள் நம்மைப் பேணும் அம்மையே இந்தப் பெருமை சேர்ந்த வடிவத்தையும் நம்மை வேண்டியே பெற்றனள்" என்று அருளிச் செய்து, பேய்வடிவுடன் அருகில் வந்தணைந்த அம்மையாரை நோக்கி உலக மெல்லாம் உய்ய "அம்மையே" என்ற ஒரு மொழியினை அருளிச் செய்தார். அம்மையார் "அப்பா" என்று அலறி அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். சிவபெருமான் "இங்கு நம்மிடத்து வேண்டும் வரம் யாது?" என்று கேட்க, அம்மையார் "என்றும் மாறாத இன்ப

அன்பு வேண்டும். பிறவாமை வேண்டும். மீண்டும் பிறப்பு உளதாயின் உம்மை என்றும் மறவாமை வேண்டும் இன்னும் நீர் ஆடுகின்ற போது நான் மகிழ்ந்து, பாடிக் கொண்டு உமது திருவடியின் கீழே இருத்தல் வேண்டும்'' என்று விண்ணப்பித்தார்.

சிவபெருமான் அவர் விரும்பியவாறே அருள் புரிபவராய்த் "திருவாலங்காட்டில் நாம் ஆடும் திருக்கூத்தைக் கண்டு ஆனந்தத்துடன் எப்போதும் நம்மைப் பாடிக் கொண்டிருப்பாயாக'' என்று அருளிச் செய்ய அம்மையார் திருவாலங் காட்டைத் தலையினுல் நடந்து அடைந்து, அண்டமுற நிமிர்ந்தாடும் ஐயனது பெருங் கோலத்தைக் கண்டு தொழுது மூத்த திருப் பதிகம் முதலியன பாடியருளினுர். பங்குனி மாதத்துச் சுவாதி நாளில் சிவப்பேறு பெற்ற அம்மையார், திருவாலங்காட்டில் சிவபெருமானது திருவடிக் கீழிருந்து என்றும் பாடிக் கொண்டிருக்கின்ருர்.

திருச்சிற்றம்பலம்

## கலிக்கம்ப நாயனார்
(சங்கம வழிபாடு)

"கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்"

:- திருத் தொண்டத் தொகை

பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க்
காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத்
தானவன் தாள்கழுவ
வையத் தவர்முன்பு வெங்கிநீர்
வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணா
கடத்துக் கலிக்கம்பனே

:- திருத்தொண்டர் திருவந்தாதி

நடுநாட்டிலே வளங்கள் மிகுந்த பழய ஊர் "திருப்பெண்ணாகடம்" என்பது. அவ்வூரில்

வணிகர் குலத்தில் அவதரித்தவர் கலிக்கம்ப நாயனார். அவர் அந்தத் திருத்தலத்திலே உள்ள திருத்தூங்கானைமாடத் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவக்கொழுந்து நாதருடைய திருத்தொண்டினையே பற்றுகப் பற்றி வாழ்ந்திருந்தார். சிவனடியார்களுக்கு விதிப்படி திருவமுதூட்டி, அவர்கள் வேண்டுவனவற்றையும் கொடுத்து வந்தார்.

ஒருநாள் திருவமுதுக்கு வந்த சிவனடியார்களின் திருவடிகளை வழக்கம் போல மனைவியார் நீர் வார்க்கத் தாம் தமது கைகளால் விளக்கிக் கொண்டிருந்தார். முன்னர் அவரது இல்லத்தில் ஏவலாளராயிருந்து, ஏவலை விட்டுச் சென்ற ஒருவர் சிவனடியாரது திருவேடத்துடன் அங்கு வந்திருந்தார் அவரடி திருவடிகளையும் விளக்குவதற்கு நாயனார் அடியைப் பிடிக்க அப்போது மனைவியார் "அவர் தமது பழைய ஏவலர் போலும்" என்று எண்ணியதில் நீர் வார்க்கச் சிறிது தாழ்த்தது. நாயனார் மனைவியைப் பார்த்து அவரது கருத்தை அறிந்து அவரிடமிருந்த நீர்க் கரகத்தைத் தாம் வாங்கிக் கொண்டு அவர் கையை வாளினுல் தடிந்தார்.

அடியவர் திருவடிகளைத் தாமே விளக்கித் துளங்காத சிந்தையுடன் எல்லாச் சிவனடியார்களுக்கும் அன்போடு திருவமுதூட்டினர். அதன் பின்னும் பல நாட்கள் திருவமுதூட்டும் திருத்தொண்டிலே வழுவாமல் ஒழுகி ஒரு தை மாதத்து இரேவதி நாளில் சிவபெருமானது திருவடி நிழற்கீழ் அடியார்களுடன் கலந்து பேரின்ப வாழ்வு பெற்றார்,

திருச்சிற்றம்பலம்



உ

சிவமயம்

# மாகேசுவர பூசை ஆசீர்வாதம்

முதற் பெருங்கடவுளாகிய சிவபெருமான், உயிர்கள் வழிபட்டு உய்யும் பொருட்டுத் திருமேனி தாங்கி எழுந்தருளியிருக்கும் எல்லாத் திருக்கோயில்களிலும் நாட்பூசனை விழாப்பூசனைகள் வேதசிவாகம விதிப்படி நடந்து வரும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹர ஹர

விபூதி உருத்திராக்க தாரணம், ஸ்ரீ பஞ்சாட்சர ஜெபம், வேத சிவாகம படனம் தேவாராதி திருமுறைப் பாராயணம் ஆன்மார்த்த சிவபூசையாதிய சிவபுண்ணியங்கள் நாடெங்கும் பரவியோங்கும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹர ஹர

மாதம் மும்மழை தவருதுபெய்து, நீர்வளம்நிலவளம் பயிர்வளம்,முதலிய எல்லா வளங்களும் செழித்தோங்கும் பொர்ருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹர ஹர

சிவபூசைச் செல்வர்......
அவர்களுக்கும் அவர்களது மனைவி,மக்கள்,உற்ருர்உறவினர் நண்பர்களுக்கும் நோயற்ற வாழ்வு குறைவற்ற செல்வம், சிவபத்தி, சிவனடியார்பத்தி குருபத்தி சிவஞானம் முதலியன மென்மேலும் பெருக உண்டாகும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹர ஹர

மாகேசுவரர்கள் எல்லோரும் திருவமுது செய்தருளுக,

**ஹர- ஹர- ஹர- ஹர**

உ

சிவமயம்

# வாழ்த்து.

மழவிடையான் மீனாட்சி மணவாளன்
மதுரையினில் வந்து கொஞ்சிப்
பழகுதமிழ் ஆராய்ந்த பாவலவன்
சொக்கலிங்கப் பரமன் நித்த
அழகனருள் மிகப்பெற்றுப் பழநியப்பன்
அகமகிழ்வே அமையும் வண்ணம்
அழகம்மை கரம்பிடித்தில் லறம்பேணி
நனிவாழ்க அவனி மீதே!

நலமே தழைக!

:- தத்புருஷ தேசிகர்.



காவேரி அச்சகம், தேவகோட்டை போன்: 209